யங்கி யாகி யளர்கற் கரியனை
  யணுக்கள் செய்யுஞ் செயலிற் கரியனே
பங்க யத்தன் பாம்பணைப் பள்ளியான்
  பயிலு மெல்லைத் திரிசிராப் பள்ளியா
னெங்கள் பாச மிரிக்கும் விருப்பமே
  யாங்கள் பேரின் பிலங்க விருப்பமே.

எ-து. தேவர்கள் தம்மையடையுமச்சத்தைத் தீர்த்திடவு முமாதேவி மனமையவு முண்டது அவ்விடமே, அழலுருவாகி யயனு மரியு மளப்பதற் கருமையானவனே, ஆன்மாக்கள் செய்யுங் கன்மங்களுக்குச் சான்றாயிருப்பவனே, தாமரையில் வாழும் பிரமனும் பாம்பணையிற் பள்ளிகொள்ளுந் திருமாலும் பணிவிடை செய்யுமெல்லையாகிய திரிசிராப்பள்ளி யென்னுந் திருப்படை வீட்டை யுடையவனே, எங்களிருவினைப் பாசங்களைக்கெடுக்கும் விருப்ப முனக்குடைமையால் யாங்கள் நிரதிசயாநந்தத்தி லென்றும் விளங்க விருப்போம் எ-று. (உஉச)

என்க்குன் மாசை யிரிக்க வியலனே
  யியலு மேயமு மான விபவனே
மனத்தி னாலு மதிக்க வரியனே
  மயக்க மன்பர்க் கரிக்கு மரியனே
தனக்குத் தானிணை யான தமியனே
  சசிக லைப்பதக காலே தமியனே
பனைக்கை யானை யுரிந்த பலத்தனே
  பாதஞ் செய்யுந் திருவம் பலத்தனே.

எ-து என் குற்றத்தை யோட்டிய வியல்பை யுடையவனே, உவமானமும் உவமேயமுமான பொருள் விரிவை யுடையவனே, மனத்தினாலுந் தியானிக்க வருமையானவனே, அன்பர்கள் மயக்கமாகிய ஆணவ விருளைக் கெடுக்கு ஞானசூரியனே, தனக்குத்தானே யொப்பானவொருவனே, சந்திரனைப் பாதத்தாற் றேய்த்துக் கிரணங்களைப் போககிவறுமைப் படுத்தினவனே, பனைபோன்ற புழைக்கையை யுடைய யானையை யுரித்த வலிமை யுடையவனே, சிபாதங்களாற் பரதவிதிப்படி நடனஞ் செய்யுந் தில்லைச்சிற்றம்பல முடையவனே. எ-று.

பாதஞ் செய்யுந் திருவம்பலத்தனே யென்று பாடமானால் அடியவர்களுக்குச் சிபாதங்களா லருள் செய்யுஞ் சிறப்பான வழகிய சாயுச்சியத்தை யுடையவனெனக் கூறுக. (உஉரு)

வஞ்சித்துறை.

காலமே கோலமே—சீலமே பாலமே
  மேலபா மேலசீ—மேலகோ மேலகா.

எ - து: முக்காலமென்னும் பொருளே, அழகென்னும் பொருளே, முக்குணமென்னும் பொருளே, மழுவைக் கரத்திலேந்தும் பொருளே, அன்

பான் உள்ளத்தின் மேல்வாழும் பொருளே, உபநிடதமாகிய பாவின்மேல் விளங்கும் பொருளே, எல்லாச்சிறப்புகளிலுஞ் சிறப்பான பொருளே, இடபத்தின்மேல் எழுந்தருளும் பொருளே, என்னைக் காக்க. எ-று.

இத்தொடைமாலைமாற்று என்ப. அது ஒருசெய்யுளை யீறுமுதலாக வாசித்தாலும் அச்செய்யுளேயாவது என்க. இதுமிறைக்கவியுள் ஒன்றென்பதைக் 'கோமூத்திரியேகூட சதுக்கமாலைமாற்றே' என்பதனானு முணர்க.

குமரன்றுதியுணர்த்துகின்றார்.

கலிநிலைத்துறை.

இருவினை யாலே யிருநிதி யூர்பே ரினமேயோ
மருவிலர் மாநோய் மரணமெ ரேவே வருபேதம்
பரிபுர பாதா பகுவல வேதா பரனேயோ
சரவண சாதா வறுமுக நாதா தணிநீயே.

எ-து. சிலம்பணிந்த பாதங்களை யுடையவனே, ஆகமமும் வேதங்களையு முடையவனே, பரனே, சரவணப்பொய்கையிற் பிறந்தவனே; ஆறுமுகத்தையுடைய நாதனே, இருவினைகளாற் பொருந்திப் பெருஞ்செல்வங்களென்றும் ஊரொன்றும் பெயரொன்றும் இனங்களென்றும் பகைவரொன்றும் பெரியநோயென்றும் மரணமென்றும்வருகின்ற பேதங்களை நீயேபோக்குக.

கலிநிலைத்துறை என்றார் - 'நேரடிநான்காய் நிகழ்வது கலித்துறை' என்பவாதலின்.

அகத்தியர்துதி யுணர்த்துகின்றார்.

விதிநிகழ் வேதா கமவுணர் வாயே வினைதீரக்
கதமுக மாமோ கமுமுக மாயா கருவேயோ
மதகரி பேழ்வாய் வலிமுக மாமா மனைவாழும்
பொதிமலை மீதே புரிமுனி தாளே புகழ்வாமே.

எ-து. மதத்தையுடைய யானையும் பிளந்த வாயையுடைய குரங்குங் காட்டுப்பசுவு மானைமிருகமும் வாழ்கின்ற பொதியமலையில் எழுந்தருளியிருந்து தவஞ்செய்யுஞ்செந்தமிழாசிரியராகிய அகத்தியமுனிவர் பாதத்தை யிருவினைதீரவுங் கோபமொழியவும் பெரியமோகமு மாயைக்கருவுங்கெடவும் விதிவிலக்குகள்விளங்கும் வேதாகமத்தி னறிவால் துதிப்பாம். எ-று.

ஏகார வோகாரங்கள்-இசைநிறை. (உஉஅ)

பன்னிரண்டாவது

கோபுரவியல்

முற்றிற்று.